8th September 1958]

**SRI P. S. CHINNADURAI :** தஞ்சையில் பெரிய கோவில் என்று அழைக்கப்படும் பிரகதீஸ்வரர் கோவிலை பழுது பார்ப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இத்தகைய ஆலயங்களின் நிலைமை அப்போதைக்கப்போது அற நிலையப் பாதுகாப்பு இலாகாவிலும் கவனிக்கப்பட்டு ரிப்பேர் செய்யப்பட்டு வருகிறது.

**SRI A. GOVINDASAMY :** கடவுள் விஷயத்திலும் பொருளாதார சமத்துவத்தை உண்டாக்க ஆட்சியாளர்கள் வேண்டிய நடவடிக்கை எடுப்பார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** எங்களுடைய நம்பிக்கை கடவுள் இதற்கெல்லாம் அப்பாற்பட்டவர்கள் என்பது.

**SRI C. NADARAJA ODAYAR :** நமது அமைச்சர் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது இந்த ஆண்டு எத்தனை கோவில்களைப் பார்த்திருக்கிறார்கள் என்று அறிவிக்க முடியுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** நான் இதைப் பற்றி ஒன்றும் குறிப்பு வைத்துக்கொள்ளவில்லை. ஆகையால் கணக்கு ஒன்றும் சொல்ல முடியாது.

*Musical Instruments*

* 100-HH *Q.*—**SRI A. VEDARATHNAM :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூரில் சங்கீதக் கருவி செய்யும் தொழிற்சாலை ஒன்று கூட்டுறவு முறையில் நடைபெறுகிறதா ?

(ஆ) அங்கு என்னென்ன கருவிகள் செய்கிறார்கள் ?

(இ) இதற்கு அரசாங்கம் புரிந்து வரும் உதவி என்ன ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** (*a*) Yes, Sir.

(*b*) Musical instruments, such as veena, thambura, violin, flute, mirudangam, harmonium, etc.

(*c*) The following items of financial assistance have been given to the Tanjore Musical Instruments Co-operative Production and Sale Society by the State Government :—

| | |
|---|---|
| **I Reserve Fund grant under the State-aid to Industries Act.** | **Rs. 2,000 (for raising the maximum borrowing power of the Society).** |
| **II Working capital loan under the State-aid to Industries Act.** | **Rs. 10,000.** |

A scheme for the sanction of financial assistance to the society for reorganizing it by means of augmenting its working capital, sanction of free services of supervisory staff, installation of machinery and opening of sales depot at Madras is also under the consideration of Government.

**SRI A. VEDARATHNAM :** ஸார். சங்கீதக் கருவிகள் செய்யும் இந்தத் தொழிற்சாலையில் கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த பட்டியலில் நாதஸ்வரம் வரவில்லை. இப்போது நாதஸ்வரத்திற்குப் பள்ளிக்கூடம் வைத்து நடத்துகிறார்கள். நாதஸ்வரம் செய்யும் தொழிலாளிகள், தொழிற்சாலைகள் குறைவு, நாதஸ்வரம் செய்யக் கூடியவர்கள்

2, 3 பேர்கள்தான் இருக்கிறார்கள். அவர்கள் மறைவதற்குள் அந்தத் தொழிலை அபிவிருத்தி செய்ய அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நாதஸ்வரம் செய்வது, வீணை செய்வதைப்போல் அவ்வளவு கஷ்டம் என்று நினைக்கவில்லை. கனம் அங்கத்தினர் சொல்வதிலிருந்து அதைச் செய்வதில் அதிக கஷ்டம் இருந்தால் அது பற்றியும் கவனம் செலுத்தப்படும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : நம் நாட்டில் " யாழ் " என்ற வாத்தியம் மறைந்து போனதை மீண்டும் பெற ஆராய்ச்சி நடத்துகிறார்களா ? இப்போது வீணை செய்வதைப் போன்று செய்து அதை மக்கள் மத்தியில் பரப்ப அந்தத் துறையில் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறதா என்று அறிய ஆசைப்படுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அகில இந்திய ஹாண்டிகிராப்ட்ஸ் போர்டு சார்பாக சங்கீத வாத்தியாலயம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. அது இத்தகைய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கிறது.

SRI M. JAGANNATHAN : அமைச்சர் அவர்கள், கொடுத்த சங்கீத வாத்தியங்கள் பட்டியலில் பண்டை காலத்திய " யாழ் " என்ற கருவி சேர்க்கப்படவில்லை. அது சேர்க்கப்படுமா ?

MR. SPEAKER: இப்போதுதான் அதைப் பற்றிச் சொன்னார்கள்.

*Tube wells*

* 100-II *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the reason for keeping the six exploratory tube wells at Udaiyarpalayam taluk, Tiruchirappalli district, idle without utilizing them for irrigation purposes; and

(*b*) the exact amount of water-rate per acre charged from the ryots.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The Exploratory Tube Well Organization which sank the wells has been addressed to provide diesel pumpsets to the wells successfully sunk.

(*b*) Out of six wells sunk, two proved to be artesian wells and a water-rate of Rs. 50 per acre was charged tentatively. On a representation made by the ryots that the rate is high, the Collector has submitted proposals for reducing the rate to Rs. 22–8–0 per acre. The matter is under consideration. The water-rate in respect of the remaining wells is yet to be fixed pending receipt of particulars of cost from the Exploratory Tube Wells Organization.

*Uppilaputhur tank*

* 100-JJ *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) செஞ்சி தாலூகா, மேல்ஒலக்கூர் பிர்க்கா, உப்பிலாபுத்தூர் ஏரியை மராமத்து செய்யவேண்டுமென்று ஊராரிடமிருந்து விண்ணப்பம் ஏதேனும் 6—2—1958-ல் வந்ததா ?

(ஆ) அப்படியானல், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?